

# ஸ்ரீ ஆண்டாள்

அருளிச் செய்த

# திருப்பாவை.



# ஸ்ரீ மாணிக்கவாசகர்

அருளிச் செய்த

# திருவெம்பாவை
# திருப்பள்ளி எழுச்சி.



( இராமநாதபுரம் சமஸ்தானம்
தேவஸ்தானம் வெளியீடு )

ஆருவது பதிப்பு—10,000.

**1967.**

குறிப்பு:- இவைகளில் கண்ட கருத்துரைகள் ஸ்ரீ காமகோடி கோசஸ்தான வெளியீடுகளை தழுவியன.



ஸ்ரீ

# ஸ்ரீ ஆண்டாள்

அருளிச் செய்த

# திருப்பாவை.



(பிலஹரி ராகம்—அடதாளம்.)

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்
நீராடப்போதுவீர்! போதுமினோ நேரிழையீர் !
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் !
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கண்ணி யசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச்செங்கண்கதிர்மதியம்போல்முகத்தான்
நாராயணனே நமக்கே பறைதருவான்
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.

(1)

கருத்துரை;- ஆய்ப்பாடி நகரில் பெண்ணொருத்தி தன் தோழியர்களைத் துயிலெழுப்பி, மார்கழி மாதத்தில் வைகறையில் நீராடினால் நாராயணனின் அம்சமான கண்ணபிரான் நமக்கு வேண்டிய புருஷார்த்தங்களைத் தருவான். வாருங்கோள் என்றழைக்கிறாள் — மார்கழி மாதத்தின் பெருமை கூறியவாறு.

( பந்துவராளி ராகம்.—ஆதி தாளம்)

வையத்து வாழ்வீர்காள்! நாமும் நம்பாவைக்குச்
செய்யும் கிரிசைகள் கேளீரோ! பாற்கடலுள்
பையத் துயின்ற பரம னடிபாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம் நாட்காலேநீராடி
மையிட் டெழுதோம் மலரிட்டு நாமுடியோம்
செய்யா தனசெய்யோம்தீக்குறளைச்சென்றோதோம்
ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி
உய்யுமா றெண்ணி உகந்தேலோ ரெம்பாவாய்.
(2)

கருத்துரை:- உலகப் பெண்களே, பாவை நோன்பு நோற்கும் உண்மை அறிவீராகளென்று உத்தமபெண்ஒருத்தி கூறுகிறாள்:- விடியலிலே நீராடி மையிட்டு மலரிட்டு அழகு செய்துகொள்ளாமலும் நெய் பால் கலந்த உணவருந்தாமலும் தீயது செய்யாமலும், புறம் கூறாமலும் கண்ணனைப் பாடிக் கேட்போர்க்கும் கேளாதவர்க்கும் உணவளித்துப் பிறப்பினின்று பிழைக்கும்வழி எண்ணிப் பாவையை ஆராதிப்போமாக—பாவை நோன்பின் விதி கூறியவாறு.

(பந்துவராளி ராகம்—திரிபுடைதாளம்)

ஓங்கி யுலகளந்த உத்தமன் பேர்பாடி
நாங்கள் நம் பாவைக்குச் சாற்றிநீ ராடினால்
தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும் மாரிபெய்து
ஓங்கு பெருஞ்செந்நெ லூடு கயலுகளப்
பூங்குவளைப் போதில் பொறிவண்டு கண்படுப்பத்
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக்குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள்
நீங்காத செல்வம் நிறைந்தேலோ ரெம்பாவாய்.
(3)

கருத்துரை:-பாவைக்கு நோன்புசெய்து விழாஎடுத்து நீராடி கண்ணபிரானின் திருநாமங்களைப் பாடினால் நாட்டில் கலகமும் கேடும் இல்லை மாதம் மும்முறை மழைபெய்யும், செந்நெல் சுறக்கும், பசுக்கள் பால்வளம் மிகுதியாகும் குறையாத செல்வம் நிறையும் எங்கும்—நோன்பின் பயன் கூறியவாறு.

(காம்போதி ராகம்—அடதாளம்.)

ஆழி மழைக்கண்ணா! ஒன்றுநீ கைகரவேல்!
ஆழியுள் புக்கு முகந்துகொடு ஆர்த்தேறி
ஊழி முதல்வ னுருவம்போல் மெய்கருத்து
பாழியந் தோளுடைப் பற்பநாபன் கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரி போல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய்! நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தேலோ ரெம்பாவாய். (4)

கருத்துரை:- மழைத் தெய்வமே நாங்கள் மார்கழி நீராடுவதற்கு நீ மனம் மகிழ்ந்தாயானால், வண்மையை ஒன்றும் மறைக்காமல் உலகினில் மக்கள் இன்பமாக வாழும்படியாகப் பெருமழை பெய்து காப்பாயாக.— இது திருமாலையும் மழையையும் உருவகித்தது. மழைப்பாட்டு. திருமாலின் மேனிக்கு மேகமும், சக்கரத்துக்கு மின்னலும். சங்கத்துக்கு இடி முழக்கமும். அப்புத்தொகுதிக்கு மழைத் தாரையும் உவமை— மழையின் வண்மை கூறியவாறு. மழைபோல் கண்ணனின் அருள் சுரக்கவேண்டும் என்று வேண்டுவது.

(தோடி ராகம்—ரூபக தாளம்.)

மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத்
தூய பெருநீர் யமுனைத் துறைவனை
ஆயர் குலத்தினில் தோன்றும் அணிவிளக்கைத்
தாயை குடல்விளக்கம் செய்ததா மோதரனைத்
தூயோமாய் வந்துநாம் தூமலர்தூ வித்தொழுது
வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்
போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும் செப்பேலோ ரெம்பாவாய்.
(5)

கருத்துரை:- விடியலில் நீராடித் தூய்மையாக மலர் எடுத்து அர்ச்சித்துப்பாவையை நோற்று மாயனை மதுரை மைந்தனை, யமுனைத்துறைவனை, தாமோதரனை, வாயினாற் பாடிச் சிந்தித்தால், செய்த பாவமும். வரஇருக்கும் பாபங்களும் தீப்பட்ட பஞ்சுபோல் சாம்பலாகும். ஆதலால் கண்ணனின் நாமம் சொல்லு என்கிறாள் — கண்ணனின் நாம மகிமை கூறியவாறு.

(பூபாள ராகம்—ஆதி தாளம்.)

புள்ளும் சிலம்பினகாண் புள்ளரையன் கோயில்
வெள்ளை விளிசங்கின் பேரரவம் கேட்டிலையோ?
பிள்ளாய்! எழுந்திராய் பேய்முலை நஞ்சுண்டு
கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி
வெள்ளத் தரவில் துயிலமர்ந்த வித்தினை
உள்ளத்துக் கொண்டு முனிவர்களும் யோகிகளும்
மெள்ள எழுந்து அரியென்ற பேரரவம்
உள்ளம் புகுந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய் (6)

*கருத்துரை:- பெண்ணே, பறவைகள் சப்திக்கின்றன. கண்ணனின் கோயிலில் மார்கழிநாள் நோன்பின் சங்கமும் முழங்குகிறது; உன் செவிகளுக்கு இவை கேட்கவில்லையா? முனிவர்களும் யோகிகளும் துயிலெழுந்து 'அரிநாராயணா' என்று கூவுகிற சப்தம் எங்கள் உள்ளத்தில் இன்பத்தைக் கொடுக்கிறது. நீ இனியும் உறங்காமல் எழுந்து நீராடுவாயாக.*

(பூபாள ராகம்—ரூபக தாளம்.)

கீசுகீசென்று எங்கும் ஆனைச்சாத் தன்கலந்து
பேசின பேச்சரவம் கேட்டிலையோ பேய்ப்பெண்ணே
காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழ லாய்ச்சியர் மத்தினால்
ஓசைப் படுத்த தயிரரவம் கேட்டிலையோ?
நாயகப் பெண்பிள்ளாய்! நாரா யணன்மூர்த்தி
கேசவனைப் பாடவும்நீ கேட்டே கிடத்தியோ?
தேச முடையாய்! திறவேலோ ரெம்பாவாய் (7)

*கருத்துரை:- உறக்கம் தெளியாத பெண்ணினிடம் சற்று கோபங்கொண்டு கூறுவது இப்பாட்டு; கரிக்குருவியின் பேரிரைச்சலையும், தயிர் கடையும் முழக்கத்தையும் கேசவனைப் பாடும் எங்கள் பஜனை ஒலியையும் கேட்டும் படுத்திருப்பவளே, நீ பேய்ச்சாதியா? அழகுடையவளே கதவைத்திற!-என்கிறாள் - தலைவியான மங்கையைத் துயிலெழுப்புகிறார்கள்.*

(பூபாள ராகம்—ஆதி தாளம்.)

கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு
மேய்வான் பறந்தனகாண் மிக்குள்ளபிள்ளைகளும்
போவான் போகின்றாரைப் போகாமல் காத்துஉன்
கூவுவான் வந்துநின்றோம்கோது கலமுடைய[ளைக்
பாவாய் எழுந்திராய் பாடிப் பறைகொண்டு
மாவாய் பிளந்தானை மல்லரை மாட்டிய
தேவாதி தேவனைச் சென்றுநாம் சேவித்தால்
ஆவா வென்றாராய்ந் தருளேலோ ரெம்பாவாய்.
(8)

*கருத்துரை:- குதூகலமுடைய பெண்ணே! கிழக்கு வெளுத்துவிட்டது. எருமைகள் கூட எழுந்து மேயச் சென்றன; உன்னை அழைப்பதற்கு மற்றவர்களையும் போகாமல் தடுத்து அழைத்து வந்துள்ளேன், எழுந்திரு. தேவதேவனை கண்ணனைப்பாடிவணங்கினால் ஆவலுடன் அருள் செய்வான்—என்றாள்.*

(மோகன ராகம்—ஆதி தாளம்.)

தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரியத்
தூபம் கமழத் துயிலணைமேல் கண்வளரும்
மாமன் மகளே! மணிக்கதவம் தாள்திறவாய்
மாமீர்! அவளை யெழுப்பீரோ? உன்மகள்தான்
ஊமையோ? அன்றிச் செவிடோ? அனந்தலோ
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ?
மாமாயன் மாதவன் வைகுந்தனென்றென்று
நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய் (9)

*கருத்துரை:- மகளே, கதவு திறப்பாயாக! மாமீர் அவளை எழுப்புவீராக. உம்மகள் இன்னும் உறங்கிக்கிடப்பதைப்பார்த்தால், ஊமையா, செவிடா, அரையுறக்கமா? அல்லது மாயன், மாதவன் வைகுந்தனென்று இடையறாமல் நவின்று பெருந்துயில் மயக்கப்பட்டாளா? என்கிறார்கள் — கண்ணனின் நாமத்தைச் சொல்வதால் மெய்மறந்த நிலை ஏற்படுமென்பது குறிப்பு.*

( அஸாவேரி ராகம்—ஆதி தாளம்.)

நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற அம்மனாய்!
மாற்றமும் தாராரோ, வாசல் திறவாதார்?
நாற்றத் துழாய்முடி நாராயணன் நம்மால்
போற்றப்பறைதரும் புண்ணியனால்பண்டொரு நாள்
கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்ப கரணனும்
தோற்றும் உனக்கே பெருந்துயில் தான் தந்தானோ
ஆற்ற அனந்த லுடையாய்! அருங்கலமே!
தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய் (10)

*கருத்துரை:-பெண்ணே! அருங்கலமே, எங்களுடைய கோஷத்தை கேட்டபின்பும் கதவைத்திறவாமல் பதிலும் பேசாமல் இருப்பவர் உண்டோ? நம்மால் புகழப்பட்டு புருஷார்த்தம் நல்கும் நாராயணனால் நாசமாக்கப்பட்ட கும்பகரணன், தூக்கத்தில் உனக்குத்தோற்று, தன் செல்வமான தூக்கத்தை உனக்களித்துவிட்டானா? இனியேனும் தெளிந்து எழுந்து கதவு திறப்பாயாக.*

( ஸஹாநா ராகம்—திரிபுடை தாளம்.)

கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து
செற்றார் திறலழியச் சென்று செறுச்செய்யும் [யே
குற்றமொன் றில்லாத கோவலர்தம் பொற்கொடி
புற்றர வல்குல் புனமயிலே! போதராய்
சுற்றத்து தோழிமா ரெல்லாரும் வந்துநின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாடச்
சிற்றாதே பேசாதே செல்வப் பெண்டாட்டி! நீ
எற்றுக்கு உறங்கும் பொருளேலோ ரெம்பாவாய்
(11)

*கருத்துரை:- கொடி போன்றவளே. புனமயிலன்னவளே, செல்வப்பெண்ணே, உன் தோழியாகிய நாங்கள் உன் வீட்டு முற்றத்தில் வந்துநின்று கண்ணன் புகழ் பாடுகின்றோம். இதுகேட்டும் உறங்குவதன் காரணம் என்னவென்று அறிய முடியவில்லையே!—என்றவாறு.*

( கேதார கௌள ராகம்—ஆதி தாளம்.)

கனைத்திளங் கற்றெருமை கன்றுக்கிரங்கி
நினைத்து முலைவழியே நின்றுபால் சோர
நனைத்தில்லம் சேருக்கும் நற்செல்வன் தங்காய்
பனித்தலை வீழநின் வாசல் கடைபற்றிச்
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற
மனத்துக் கினியானைப் பாடவும்நீ வாய்திறவாய்
இனித்தா னெழுந்திராய் ஈதென்ன பேருறக்கம்!
அனைத்தில்லத் தாரும் அறிந்தேலோ ரெம்பாவாய்
(12)

கருத்துரை:- பால்வளம் நிறைந்த ஆடவர் குலத்துச் செல்வனின் தங்கையே! இங்குள்ள எல்லா வீட்டின் நங்கைமாருமாகிய நாங்கள் உன் வீட்டு வாசல் கடையைப் பிடித்துக்கொண்டு பனிநீர் தலையில் விழும்படியாக நின்று, மனரஞ்சிதனான ராமனைப்புகழ்ந்து பாடுகின்றோம்: இதைக் கேட்டும் நீ வாய்திறவாமலும்,எழுந்திராமலும் பெருந்தூக்கத்திலிருக்கின்றாயே! இதுஎன்ன அதிசயம் என்றவாறு.

( அடாணா ராகம்—ரூபக தாளம்.)

புள்ளின் வாய் கீண்டானைப் பொல்லா அரக்கனைக்
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்
பிள்ளைக ளெல்லாரும் பாவைக் களம்புக்கார்
வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்று ;
புள்ளும் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்!
குள்ளக் குளிரக் குடைந்துநீ ராடாதே
பள்ளிக் கிடத்தியோ, பாவாய்நீ நன்னாளால்?
கள்ளம் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய்.
(13)

கருத்துரை:- பெண்ணே சுக்கிரன் உதயமாகிவிட்டது குரு வீழ்ந்து மறைந்தது. பறவைகள் சப்திக்கின்றன. கண்ணனுடையவும் ராமனுடையவும் புகழ்களைப் புகழ்ந்து பாடிக்கொண்டே பெண்கள் யாவரும் பாவை நோன்பு நோற்கும் அரங்கம்அடைந்தார்கள். இந்தப்புனிதநாளிலே பொய்யுறக்கம் விட்டு எழுந்து எங்களுடன் கூடிப் புனல் குடைந்து நீராடாமல் படுக்கையில் கிடப்பதோ?

( ஸாரங்க ராகம்— ஆதி தாளம். )

உங்கள் புழக்கடைத்தோட்டத்து வாவியுள் [காண்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல்வாய்கூம்பின
செங்கல் பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்
தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போதந்தார்
எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும்
நங்காய்!எழுந்திராய்; நாணாதாய்! நாவுடையாய்!
சங்கொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன்
பங்கயக் கண்ணனைப் பாடேலோ ரெம்பாவாய்.
(14)

கருத்துரை:- பெண்ணே, எங்களை முன்னதாக எழுப்புவதாகச் சொன்ன உனக்கு வெட்கமில்லையோ? உங்கள் வீட்டுக் கொல்லைப்புறத்தில் செங்கழுநீர் மலர்ந்துவிட்டது ஆம்பல்குவிந்துவிட்டது துறவியர் கோயில்திறக்கப்போய் விட்டார்கள். கண்ணனைப்பாட எழுந்திருப்பாயாக.

( ஸௌராஷ்ர ராகம்—அடதாளம்.

எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ?
சில்லென் றழையேன்மின், நங்கைமீர் போதரு
[கின்றேன்
வல்லைஉன் கட்டுரைகள் பண்டேஉன் வாயறிதும்
வல்லீர்கள் நீங்களே நானேதா னாயிடுக
ஒல்லைநீ போதாய் உனக்கென்ன வேறுடையை?
எல்லாரும் போந்தாரோ? போந்தார் போந்
[தெண்ணிக்கொள்
வல்லானை கொன்றானை மாற்றாரை மாற்றழிக்க
வல்லானை மாயனைப் பாடேலோ ரெம்பாவாய்
(15)

கருத்துரை:- கிளி போன்றவளே. இன்னுமா உறங்குகிறாய்? என்கிறார்கள் தோழிகள். நடுங்கும்படியாகக் கூப்பிடாதீர்கள். வருகிறேன் என்கிறாள் உறங்குபவள், நீ மிகவும் வல்லவள், உன் வார்த்தைகளை முன்பே அறிவோம், எழுந்து வா என்கிறார்கள் தோழிகள். நான் வல்லவளோ நீங்கள் தாம் வல்லவரோ, எல்லாரும் வந்தார்களோ? என்கிறாள் உறங்குபவள், எல்லாரும் வந்தார்கள். வந்துபார்த்துக்கொள், கண்ணனைப் பாடுவோம்-என்கிறார்கள் தோழிகள்.

( யமுனா கல்யாணி ராகம்—ஆதி தாளம்.)

நாயகனாய் நின்ற நந்தகோ பனுடைய
கோயில் காப்பானே! கொடித்தோன்றும்தோரண
வாயில்காப்பானே! மணிக்கதவம் தாள்திறவாய்!
ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலேவாய்நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்
வாயால் முன்னமுன்னம் மாற்றாதே அம்மா! நீ
நேய நிலைக்கதவம் நீக்கேலோ ரெம்பாவாய்.

(16)

*கருத்துரை:- நந்தகோபாலனுடைய அரண்மனைக்குச் சென்ற பெண்கள் வாயில்காப்போனை நோக்கி, கண்ணனைத் துயிலெழுப்ப நாங்கள் வருவதை நேற்றே ஒப்புக் கொண்டான்அவன். தூய்மையாக முதலில் வந்துள்ளோம் கதவு திறப்பாயாக என்கிறார்கள்.*

( யமுனா கல்யாணி ராகம்—ரூபக தாளம்.)

அம்பரமே தண்ணீரே சோறே அறஞ்செய்யும்
எம்பெருமான்! நந்தகோ பாலா! எழுந்திராய்!
கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே குலவிளக்கே
எம்பெரு மாட்டி யசோதாய்! அறிவுறாய்;
அம்பர மூடறுத் தோங்கி உலகளந்த
உம்பர்கோ மானே! உறங்காது எழுந்திராய்
செம்பொற் கழலடிச் செல்வா! பலதேவா!
உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய்

(17)

*கருத்துரை:- ஆடையும், சோறும், இன்னீரும் அளிக்கும் அறமுடைய நந்தகோபனே, யசோதையே கண்ணனே, பலதேவனே, துயில் நீக்கி எழுவீர்களாக என்கிறார்கள்.*

( ஸாவேரி ராகம்— ஆதி தாளம்.)

உந்து மதகளிற்றன் ஓடாத தோள்வலியன்
நந்த கோபலன் மருமகளே! நப்பின்னுய்!
கந்தம் கமழும் குழலீ! கடைதிறவாய்!
வந்துஎங்கும் கோழி அழைத்தனகாண் மாதவிப்
பந்தல்மேல் பல்கால் குயிலினங்கள் கூவினகாண்
பந்தார் விரலீ! உன் மைத்துனன் பேர்பாடச்
செந்தா மரைக்கையால் சீரார் வளையொலிப்ப
வந்து திறவாய் மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.

(18)

*கருத்துரை:- நந்தகோபாலனுடைய மருமகளான நப் பின்னையே கோழியும், குயிலும் கூவின, உன் கணவனை கண்ணனைப் பாடக் கதவு திறந்து எழுந்து வருவாயாக என்கிருர்கள்.*

( ஸ்ரீராகம்—ஆதி தாளம்.)

குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா! வாய்திறவாய்!
மைத்தடங் கண்ணினுய்! நீஉன் மணுளனை
எத்தனை போதும் துயிலெழ வொட்டாய்காண்
எத்தனை யேலும் பிரிவாற்ற கில்லாயால்
தத்துவ மன்று தகவேலோ ரெம்பாவாய்.

(19)

*கருத்துரை:- நப்பின்னையுடன் உறங்கிக் கிடக்கும் கண்ணு, நீ பேசமாட்டாய்! பின்னையே, நீ தான் இன்னும் எவ்வளவு நாழிகை கண்ணனை உறக்கம் தெளியாமல் வைத்திருப்பாய்? சிறிதும் பிரியமாட்டாயா? இது உண் மையா? தகுதியல்ல இது என்கிருர்கள்.*

(தேசி ராகம்—ஆதி தாளம்.)

முப்பத்து மூவர் அமரர்க்கு முன்சென்று
கப்பம் தவிர்க்கும் கலியே! துயிலெழாய்!
செப்ப முடையாய்! திறலுடையாய்! செற்ருர்க்கு
வெப்பம் கொடுக்கும் விமலா! துயிலெழாய்!

செப்பன்ன மென்முலைச் செவ்வாய்ச் சிறுமருங்குல்
நப்பின்னை நங்காய்! திருவே! துயிலெழாய்!
உக்கமும் தட்டொளியும் தந்துஉன் மணாளனை
இப்போதே எம்மைநீ ராட்டேலோ ரெம்பாவாய்.
(20)

கருத்துரை:- துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலன கண்ணனே, உறக்கம் தெளிவாயாக. நப்பின்னையே விழிப்பாயாக! விசிறியும் கண்ணாடியும் அளித்துக் கண்ணனை எம்முடன் நீராட்டுவிப்பாயாக என்கிறார்கள்:

(காம்போதி ராகம்— ஆதிதாளம்)

ஏற்ற கலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப
மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள்
ஆற்றப் படைத்தான் மகனே அறிவுறாய்;
ஊற்ற முடையாய்! பெரியாய்! உலகினில்
தோற்றமாய் நின்ற சுடரே! துயிலெழாய்;
மாற்றார் உனக்கு வலிதொலைந்துஉன் வாசற்கண்
ஆற்றாது வந்துஉன் னடிபணியு மாப்போல
போற்றி யாம்வந்தோம் புகழ்ந்தேலோ ரெம்பாவாய்
(21)

கருத்துரை:- உலகில் பிரத்யட்ச தெய்வமான பரஞ்சுடரே, உன் பகைவர்கள் வலியழிந்து உன் வாசலில் சரணடைந்தது போல நாங்களும் உன் வாசலில் வந்து உன் புகழ்பாடி நிற்கின்றோம். துயிலெழுந்து வந்திருப்பதை அறிவாயாக.

(பைரவி ராகம்—ஆதிதாளம்.)

அங்கண்மா ஞாலத் தரசர் அபிமான
பங்கமாய் வந்துநின் பள்ளிக்கட் டிற்கீழே
சங்க மிருப்பார்போல் வந்து தலைப்பெய்தோம்
கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ?
திங்களும் ஆதித் தியனும் எழுந்தாற்போல் [யேல்
அங்க ணிரண்டும்கொண்டு எங்கள்மேல் நோக்குதி
எங்கள்மேல் சாபம் இழிந்தேலோ ரெம்பாவாய்
(22)

கருத்துரை:- கண்ணா உன்னிடம் தோற்ற பகையரசர் யாவரும் உன் படுக்கைக் கட்டிலின்கீழ் வந்துஅமர்ந்தாற்போல் நாங்களும் அணுகினோம். சிறிது சிறிதாக விழித்தேனும் பாராயாக? நீ பார்த்தால் எங்கள் பாபம் போகும்.

( அடாணு ராகம்—ஆதிதாளம்.)

மாரி மலைமுழஞ்சில் மன்னிக்கிடந் துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமாப் போலநீ பூவைப்பூ வண்ணு! உன்
கோயில்நின்று இங்ஙனே போந்தருளிக் கோப்
சீரிய சிங்கா சனத்திருந்து யாம்வந்த [புடைய
காரியம் ஆராய்ந் தருளேலோ ரெம்பாவாய். (23)

கருத்துரை;- கண்ணனே, மாரிகாலத்து மலைக்குகையில் தூங்குகின்ற சிங்கம் ஒலிகேட்டு கோபித்து, கர்ச்சித்து வெளிவந்தாற்போல் நீ உறக்கம் தெளிந்து எங்கள் முன் வந்து சிங்காதனத்து அமர்ந்து, நாங்கள் வேண்டுவதை அருள் செய்வாயாக.

( பியாகடை ராகம்— ஆதி தாளம் )

அன்றுஇவ் வுலகம் அளந்தாய் அடிபோற்றி !
சென்றங்குத் தென்னிலங்கை செற்ருய் திறல்போற்
பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்போற்றி! [றி!
கன்று குணிலா எறிந்தாய் கழல்போற்றி !
குன்று குடையா எடுத்தாய் குணம்போற்றி !
வென்று பகைகெடுக்கும் நின்கையில் வேல்போற்றி
என்றென்றுஉன் சேவகமே ஏத்திப் பறைகொள்
[வான்
இன்றுயாம் வந்தோம் இரங்கேலோ ரெம்பாவாய்
(24)

கருத்துரை;- கண்ணனே, உலகமளந்தவனே! உன் பாதம் வணங்குகிருேம். இலங்கையையழித்த உன் புகழை போற்றுகிருேம். கன்றை குணிலாக எறிந்த உன் பாதம் வணங்குகிருேம். மலையைக் குடையாக எடுத்து மக்களைக் காத்த உன் தன்மையைப் போற்றுகிருேம். பகையை அழிக்கும் உன் வேலுக்கு வணக்கம் - என்றெல்லாம் கூறி உன் வீரத்தைப் புகழ்ந்து வேண்டுவன பெறுவதற்காக உன் முன் வந்தோம். அருள்வாயாக.

(சங்கராபரண ராகம்—ஆதி தாளம்.)

ஒருத்தி மகனாய் பிறந் தோரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளரத்
தரிக்கிலா னாகித்தான் தீங்கு நினைந்த
கருத்தைப் பிழைப்பித்துக் கஞ்சன் வயிற்றில்
நெருப்பென்ன நின்ற நெடுமாலே! உன்னை
அருத்தித்து வந்தோம் பறைதருதி யாகில்
திருத்தக்க செல்வமும் சேவகமும் யாம்பாடி
வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்தேலோ ரெம்பாவாய்.
(25)

*கருத்துரை;- ஜன்ம பகைவனான கம்ஸனின் தீய எண்ணத்தை விலக்கி, அவன் உயிர் கலங்கும்படியாக வளர்ந்து நின்ற கண்ணனே, உன்னை விரும்பி வந்த எங்களுக்குப் புருஷார்த்தத்தை அளித்தால் உன் புகழ்பாடி மகிழ்ந்து வருத்தம் நீங்குவோம்.*

(ஆரபி ராகம்—ஆதி தாளம்.)

மாலே! மணிவண்ணா! மார்கழிநீ ராடுவான்
மேலையார் செய்வனகள் வேண்டுவன கேட்டியேல்
ஞாலத்தை எல்லாம் நடுங்க முரல்வன
பாலன்ன வண்ணத்துஉன் பாஞ்ச சன்னியமே
போல்வன சங்கங்கள் போய்ப்பாடு டையனவே
சாலப் பெரும்பறையே பல்லாண் டிசைப்பாரே
கோல விளக்கே கொடியே விதானமே
ஆலி னிலையாய்! அருளேலோ ரெம்பாவாய்.
(26)

*கருத்துரை:- திருமாலே மார்கழி நீராடுவதற்கு மேலோர்கள் செய்வனவும், வேண்டுவனவும் என்னவென்றால் சங்கம் முழங்குதல், பறை ஒலித்தல், பல்லாண்டு பாடுதல் மங்கள விளக்கு ஏற்றுதல், கொடி நிறுத்தல், மேல் கட்டி கட்டுதல்-அவற்றை எங்களுக்கு நீ அருள்வாயாக.*

(ஆநந்தபைரவி ராகம்—ஆதி தாளம்.)

கூடாரை வெல்லும்சீர்க் கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறு சம்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே என்றனைய பல்கலனும் யாமணிவோம்
ஆடை யுடுப்போம் அதன்பின்னே பாற்சோறு
மூட நெய்பெய்து முழங்கை வழிவாரக்
கூடி யிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.

(27)

கருத்துரை:- கண்ணா உன்னைப்பாடி முடிவில்நாங்கள் பெரும் சன்மானம் மிக உயர்ந்தது, அவை என்னவென்றால், ஆபரணம் அணிவோம், பூச்சூடுவோம், புத்தாடை உடுப்போம், பாலும் நெய்யும் கலந்த அடிசிலுண்போம்.

(தந்யாசி ராகம்—ஆதி தாளம்.)

கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்துண்போம்
அறிவொன்று மில்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்
குறைவொன்றுமில்லாத கோவிந்தா! உன்தன்னோடு
உறவேல் நமக்குஇங்கு ஒழிக்க ஒழியாது
அறியாத பிள்ளைகளோம் அன்பினால் உன்தன்னைச்
சிறுபே ரழைத்தனவும் சீறி யருளாதே
இறைவா! நீதாராய் பறையேலோ ரெம்பாவாய்

(28)

கருத்துரை:- கண்ணா, உன்னுடனும் பசுக்களுடனும் நாங்களும் காட்டுக்குச் சென்று உணவருந்துகிறோம். அறிவற்ற ஆய்க்குலத்தில் எங்களுடன் நீ பிறக்கும் புண்ணியம் உடையோம். உன் உறவை ஒழிக்க முடியாதவர்களானோம். அன்பால் உன்னை அறியாத நாங்கள் சிறுமைப் பெயரிட்டழைத்ததற்கு கோபம் கொள்ளாதே.

( கல்யாணி ராகம்—ஆதி தாளம்.)

சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துஉன்
பொற்றாமரையடியே போற்றும் பொருள்கேளாய்!
பெற்றம்மேய்த் துண்ணும் குலத்தில் பிறந்துநீ
குற்றவேல் எங்களைக் கொள்ளாமல் போகாது
இற்றைப் பறைகொள்வா னன்றுகாண்கோவிந்தா!
எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு
உற்றோமேயாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றைநங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்.

(29)

கருத்துரை:- கண்ணா, உன்னை நாங்கள் வழிபடும் காரியம் என்னவென்றால், ஏதோ இம்மைப் பலனை உத்தேசித்தல்ல. அதனால் நீ எங்களை ஏவல் கொள்ளாமலிருப்பது தகுதியல்ல. எவ்வளவு பிறவியானாலும் உன் உறவையே நாடுவோம், உனக்கே அடிமையாவோம். மற்ற விருப்பங்கள் எங்கள் மனதை விட்டு அகலுமாறு அருள்வாய்.

(சுருட்டி ராகம்—ரூபக தாளம்.)

வங்கக் கடல்கடைந்த மாதவனைக் கேசவனைத்
திங்கள் திருமுகத்துச்சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறைகொண்ட வாற்றை அணிபுதுவைப்
பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதை
சங்கத் தமிழ்மாலை முப்பதும் தப்பாமே [சொன்ன
இங்குஇப் பரிசுரைப்பார் ஈரிரண்டு மால்வரைத்
[தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள்பெற்று இன்புறுவ ரெம்பாவாய்.

(30)

கருத்துரை:- கண்ணபிரானைக் கோபியர்கள் வழிபட்டு மார்கழி நோன்பு முடித்த விதத்தைப் பாடிய கோதை பிராட்டியின் முப்பது பாடல்களையும் பாடுவோர் திருமாலின் திருவருளை எங்கும் பெறுவார் என்பது உறுதி.

குறிப்பு:- வீதியில் சேர்ந்து செல்லும் பல பெண்கள் தன் தோழியரைத் துயிலெழுப்பி மார்கழி நீராட அழைத்துச்செல்லும் காட்சிகள் பலபடியாக சித்தரித்துக்காட்டப் பெறுகின்றன. பாவைநோன்பு-மார்கழிநோன்பு-காத்தியாயனி விரதம் என்பதுமாம்.

உ

திருச்சிற்றம்பலம்.



## ஸ்ரீ மாணிக்கவாசகர்

அருளிச் செய்த

# திருவெம்பாவை.

— ✻ —

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியையாம் பாடக்கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த் [தொலிபோய்
வீதியாய்க் கேட்டலுமே விம்மிவிம்மிமெய்ம்மறந்து
போதார் அமளியின்மேல் நின்றும் புரண்டு இங்
ஏதேனு மாகாள்கிடந்தாள் என்னேஎன்னே [ஙன்
ஈதே எந்தோழி பரிசேலோர் எம்பாவாய்.

(1)

கருத்துரை;- பெண்ணே! சோதியான சிவபெருமானை [illegible] வைதக் கேட்டபின்பும் நீ தூங்குகின்றாயே! அவ்வளவு உ[illegible] உன் செவி? இதோ பார், சிவபிரானை நாங்கள் வாழ்த்தும் ஒலி கேட்ட வுடன் ஒருத்தி அறிவிழந்து படுக்கையில் அவலமாய்க் கிடக்கிறாள்! அப்படியிருக்க உன் நிலை இதுவோ.

பாசம் பரஞ்சோதிக் கென்பாய் இராப்பகல்நாம்
பேசும்போ தெப்போ திப்போதார் அமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
சீசி இவையுஞ் சிலவோ விளையாடி
ஏசுமிடம் ஈதோ விண்ணோர்கள் ஏத்துதற்குக்
கூசு மலர்ப்பாதந் தந்தருள வந்தருளுந்
தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பார்யாம் ஆரேலோர் எம்பாவாய்.
(2)

கருத்துரை:- பெண்ணே! சிவபிரானிடம் அன்பு வைத்து இராப்பகலாக அவன் சிறப்பை நாம் பேசியிருப்பது எப்போது? படுக்கையிலே பற்றுக்கொண்டாயா என்கிறாள் ஒருத்தி, அதற்கு உறங்கியவள் கூறுகிறாள்; தோழிகளே, சீசி இப்படியும் சில பேசவதோ? விளையாடும் இடம் இதுவா? என்கிறாள், தோழியர்கள் கூறுகிறார்கள்: பெண்ணே, சிவபிரானுக்கு நம் அன்பு எத்கையது? நாம் யார்? தெரியுமா? அறிவாயாக.

முத்தன்ன வெண்ணகையாய் முன்வந்தெதிரெழுந் [தென்
அத்தன் ஆனந்தன் அமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீர்ஈசன் பழஅடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் [பொல்லாதோ
எத்தோநின் அன்புடைமை எல்லோ மறியோ
சித்தம் அழகியார் பாடாரோ நஞ்சிவனை [மோ
இத்தனையும்வேண்டும் எமக்கேலோர் எம்பாவாய்
(3)

கருத்துரை:- பெண்ணே! முன்பு சிவபிரானை நாக் குளிரப்பலவாறு புகழ்ந்துபேசியநீ இன்று தூங்கியவளாய்க் கதவு திறக்காதிருக்கிறாய் ஏன்? என்கிறார்கள் தோழிகள். அதற்கவள், சிவபக்தியுடையீர், புது அடியோமாகிய எங்களைச் சிறுமையைப் போக்கி ஆட்கொண்டால் தீங்கா? என்கிறாள்; அதற்கவர்கள் உன் அன்பு எவ்வளவு என்பதெல்லாம் நாங்கள் அறியோமோ! மனம் தூயவர்கள் நமது இறைவனைப் பாடார்களோ? இவ்வளவும் வேண்டியதுதான் எங்களுக்கு!

ஒண்ணித் திலநகையாய் இன்னம் புலர்ந்தின்றோ
வண்ணக் கிளிமொழியார் எல்லாரும்வந்தாரோ
எண்ணிக்கொடுள்ளவா சொல்லுகோம் அவ்வளவும்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப்போக்காதே
விண்ணுக்கொரு மருந்தை வேதவிழுப்பொருளைக்
கண்ணுக்கினியானைப் பாடிக்கசிந்துள்ளம்
உள்நெக்கு நின்றுருக யாமாட்டோம் நீயேவந்
தெண்ணிக்குறையில் துயிலேலோர் எம்பாவாய்.

(4)

கருத்துரை;- பெண்ணே! இன்னும் உனக்குப் பொழுது புலரவில்லையோ? என்கிறார்கள் தோழிகள். அதற்கவள் எல்லாத் தோழியரும் வந்தார்களா? என்கிறாள், தோழிகள்-நாங்கள் எண்ணிச் சொல்கிறோம் அதற்குள் தூங்கி காலத்தை வீணாக்காதே; அன்றி வேதப் பொருளான இறையைப் பாடி உருகும் நாங்கள் எண்ண மாட்டோம் நீயே எண்ணிக் குறைந்தால் தூங்கப்போ என்கிறார்கள்.

மாலறியா நான்முகனுங் காணா மலையினை நாம்
போலறிவோம் என்றுள்ள பொக்கங்களே பேசும்
பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே அறிவரியான்
கோலமும் நம்மைஆட் கொண்டருளிக்கோதாட்டுஞ்
சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்
றோலமிடினு முணராய் உணராய்காண்
ஏலக் குழலி பரிசேலோர் எம்பாவாய்

(5)

கருத்துரை:- பெண்ணே! மாலயன் அறியா மாதேவனை நாம் அறிவோமென்று பொய் பேசும் நீ வஞ்சனையுள்ளவளே! கதவைத் திறப்பாயாக! அத்தகையவனுடைய வடிவத்தையும் குணத்தையும் பாடும் எங்கள் குரல் ஓசையைக் கேட்டும் விழிக்காதவளே! இதுவோ உன் தன்மை.

மானே நீ நென்னலை நாளை வந்துங்களை
நானே யெழுப்புவன் என்றலும் நாணாமே
போன திசை பகராய் இன்னம் புலர்ந்தின்றோ
வானே நிலனே பிறவே அறிவரியான்
தானே வந்தெம்மைத் தலையளித்தாட்கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திற
ஊனே உருகாய் உனக்கே உறுமெமக்கும் [வாய்
ஏனோர்க்குந்தங்கோனைப்பாடேலோர் எம்பாவாய்

(6)

*கருத்துரை :- பெண்ணே! நேற்று நீ எங்களை ''நாளை நான் வந்தெழுப்புவேன்'' என்றாயே! அதுபோன திசையைச் சொல்லு இன்னும் விடியவில்லையா? தானாக வந்து ஆட்கொள்ளும் சிவன்றாளைப்பாடிவரும் எங்களுக்கு ஒரு வார்த்தை சொல்லாய்! உருகாய்! இது உனக்குத் தகுமா? எம்பெருமானைப் பாடுவாயாக.*

அன்னே இவையுஞ் சிலவோ பலவமரர்
உன்னற் கரியா னொருவன் இருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்
தென்னா என்னாமுன்னந் தீசேர்மெழுகொப்பாய்
என்னானை என்னரையன் இன்னமுதென்றெல்லோமுஞ்
சொன்னோங்கேள் வெவ்வேறாய் இன்னந்துயி
[லுதியோ
வன்னெஞ்சப்பேதையர்போல் வாளாகிடத்தியால்
என்னே துயிலின் பரிசேலோர் எம்பாவாய்.

(7)

*கருத்துரை:- பெண்ணே! இதுவும் சில விளையாட்டுப்போலும்! சிவபிரானின் சின்னங்களின் ஒலி கேட்டால் சிவனென்று கூவுவாய்! 'தென்னா' என்றால் தழல்பட்ட மெழுகாவாய்! ஆனால் இன்று நாங்கள் தனித்தனியே அவன் புகழ் பாடினோம் நீ கொடுமன மங்கைபோல் தூங்கிக்கிடக்கிறாய்! உறக்கத்தின் தன்மை இதுவோ?*

கோழி சிலம்பச் சிலம்பும் குருகெங்கும்
ஏழி லியம்ப இயம்பும்வெண் சங்கெங்கும்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில்விழுப்பொருள்கள் பாடினோம்கேட்டிலையோ
வாழியீ தென்ன வுறக்கமோ வாய்திறவாய்
ஆழியான் அன்புடைமை ஆமாறும் இவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற ஒருவனை
ஏழை பங்காளனையே பாடேலோர் எம்பாவாய்.
(8)

கருத்துரை:- பெண்ணே! கோழியும் பறவையும் கூவி ஒலிக்கின்றன. விடியல் சங்கு முழங்குகின்றது. பெருமானுடைய புகழ் நாங்கள் பாடினோம் நீ கேட்கவில்லை இதென்ன தூக்கம் உனக்கு? வாய் பேசாதவளே! ஆழியான் மீது அன்புடைமைத்திறம் இவ்விதமோ? ஏழையின் தோழனான ஈசனைப் பாடுவாயாக.

முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப்பழம்
[பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
உன்னடியார் தாள்பணிவோம் ஆங்கவர்க்கே
[பாங்காவோம்
அன்னவரே எங்கணவ ராவார் அவருகந்து
சொன்னபரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே யெமக்கெங்கோன் நல்குதியேல்
என்னகுறையு மிலோமேலோர் எம்பாவாய்.
(9)

கருத்துரை:- முன்னதாய்ப் பழம்பொருள்களுக்கும் பழமையான பொருளே! பிற்பட்ட புதுமைப் பொருள்களுக்கும் அவ்விதமே புதுத்தன்மையனே! உன்னைத் தலைவனாக அடைந்த அடியோங்கள் உன் அடியார்களின் பாதம் பணிவோம். உதவியாவோம். அவர்களே எம் கணவராவர். அவர்கள் சொன்ன பணியில் அடிமையாய் வாழ்வோம். இந்த வகை எமக்கருளினால் எக்குறையும் இல்லாதவராவோம்.

பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியும் எல்லாப்பொருண்முடிவே
பேதைஒருபால் திருமேனி ஒன்றல்லன்
வேதமுதல் விண்ணோரு மண்ணுந் துதித்தாலும்
ஓதஉலவா ஒருதோழன் தொண்டருளன் [காள்
கோதில் குலத்தரன்றன் கோயிற்பிணாப் பிள்ளை
ஏதவனூர் ஏதவன்பேர் ஆருற்றார் ஆர்அயலார்
ஏதவனைப் பாடும் பரிசேலோர் எம்பாவாய்.
(10)

*கருத்துரை:- சிவபிரான், கோயில் பெண்களே, மேலும் கீழும் கணிக்கமுடியாத முடிவுடைய பொருள் அவன். உடலில் ஒருபாதி தேவி ஒரே உருஉடையவனல்லன். வேதமும் விண்ணும் மண்ணும் புகழ்ந்தாலும் புகழின் அளவு கடந்தவன்: அடியவர் உள்ளத்தினன். அவன் ஊர் எது? அவன் பேர் என்ன? உற்றார் யார்? அயலார் யார்? அவனைப் பாடும் தன்மை எது? சொல்லுங்கள்.*

மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி
ஐயாவழியடியோம் வாழ்ந்தோங்காண் ஆரழல்போற்
செய்யா வெண்ணீருடி செல்வா சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
ஐயா நீயாட்கொண் டருளும் விளையாட்டின்
உய்வார்கள் உய்யும் வகையெல்லா முய்ந்தொழிந்
[தோம்
எய்யாமற் காப்பா எமையேலோர் எம்பாவாய்.
(11)

*கருத்துரை :- சிவபெருமானே, உன் வழியடிமைகளான நாங்கள் தடாகத்தில் நீராடி உன் பாதமலர்களைப் பாடி வாழ்கின்றோம் ஐயா, நீ அடியார்களை ஆட்கொள்ளும் விளையாட்டின் நற்கதி சேருவோர் செல்லும் வழிகளில் சென்றோம். முடிவுற்றோம். தவறாமல் எம்மைக் காப்பாயாக.*

ஆர்த்த பிறவித் துயர்கெட நாமார்த்தாடும்
 தீர்த்தனற் றில்லைச் சிற்றம்பலத்தே தீயாடும்
கூத்தன் இவ்வானுங் குவலயமும் எல்லோமுங்
 காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி
வார்த்தையும்பேசி வளைசிலம்ப வார்கலைகள் [பப்
 ஆர்ப்பரவஞ்செய்ய அணிகுழல்மேல்வண்டார்ப்
பூத்திகழும் பொய்கை குடைந்துடையான்
 [பொற்பாதம்
 ஏத்தியிருஞ்சுனை நீ ராடேலோர் எம்பாவாய்.
(12)

*கருத்துரை:- பெண்ணே! சிவபிரானுடைய ஆக்கல், காத்தல், அழித்தல்-என்னும் முத்தொழில் விளையாட்டுச் சிறப்பினை நாம் கூறி, பொய்கையில் நீராடி வணங்கி விளையாடுவோமாக.*

பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப்பைம்
 [போதால்
 அங்கங் குருகினத்தாற் பின்னு மரவத்தாற்
தங்கண் மனங்கழுவு வார்வந்து சார்தலினல்
 எங்கள்பிராட்டி யும் எங்கோனும்போன் றிசைந்த
பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநம்
 சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
 பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோர்
 [எம்பாவாய்
(13)

*கருத்துரை:- பெண்டிர்களே! நம் சிவபெருமானும் உமையம்மையும் போன்ற நிலையிலுள்ளதான இந்தப் பொய்கையில் நாம் நீராடி விளையாடுவோமாக. குவளை உமைக்கும், கமலப்பைம்போது—சிவபிரானுக்கும் குருகினம் சிவபிரானின் குருக்கத்தி மலர்மாலைக்கும்-தேவியின் சங்க வளையல்களுக்கும், அரவம்-பொய்கையின் ஒலிக்கும் மலம் அடியார்கள் மும்மலத்துக்கும் உவமைகள்.*

காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம்பலம் பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்
சோதித் திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதித் திறம்பாடி யந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி யாடேலோர் எம்பாவாய்.

(14)

கருத்துரை:- பெண்டீர்களே! சிற்றம்பலத்தையும் வேதப் பொருளையும் அப்பொருளாய் நிற்கும் ஈசனையும் அவன் ஒளித்திறத்தையும், அவன் முடிமாலையையும் ஆதி யந்தமான நிலையையும் பாடி அஞ்ஞானத்திலிருந்து நம்மை வேறுபடுத்திக் காத்த அம்மையின் பாதத் திறத்தையு பாடி நீராடுவோமாக.

ஓரொருகால் எம்பெருமான் என்றென்றே நம் [பெருமான்
சீரொருகால் வாயோவாள் சித்தங் களிகூர
நீரொருகால் ஓவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் [தான் பணியாள்
பேரரையற் கிங்ஙனே பித்தொருவர் ஆமாறும்
ஆரொருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் [வித்தகர்தாள்
வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி
ஏருருவப் பூம்புனல் பாய்ந் தாடேலோர் [எம்பாவாய்.

(15)

கருத்துரை:-பெண்டிர்களுள் ஒருத்தி 'எம்பெருமான்' என்று ஓவ்வோர் சமயம் கூறியவளாக சிவபிரானின் சிறப்பை இடை விடாமல் கூறுகிருள். மனமகிழ்ச்சி மிகுத லாலிடைவிடாது கண்ணீர்விடுகிருள். நிலத்தில் எழுந்தி ருக்காமல் ஒரே முறையாக வணங்கிக் கிடக்கிருள். வான வர்களையும் வணங்காள். இவ்வாறு நம் பெருமானிடம் அவள் பித்துக்கொண்ட தன்மையையும் ஆட்கொள்ளும் எம்பெருமானின் பாதங்களையும் வாயாரப் பாடி நீராடு வோமாக!

முன்னிக் கடலேச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத்திகழ்ந்தெம்மை ஆளுடையாள்இட்டிடை
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற் [யின்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலேகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப்பொழியாய் மழையேலோர் எம்பாவாய்
(16)

கருத்துரை:- மழையே, காருக்கு முன் கடல் நீர் அருந்தி எம்பெருமாட்டி உமையின் உடல்போல நீலமாகி அம்மையின் இடைபோல் மின்னி, அம்மையின் பாதச் சிலம்புபோல் முழங்கி, அம்மையின் பிரிவிலா அரன் தம் அடியார்க்கும், அம்மை நமக்கும் அருள் சுரப்பது போல் மழை பொழிக.

செங்கணவன்பாற் றிசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கும் இலாததோர் இன்பநம் பாலதாகக்
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனே
அங்கண் அரசை அடியோங்கட் காரமுதை
நங்கள் பெருமானேப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல்பால்பாய்ந் தாடேலோர்
[எம்பாவாய் (17)

கருத்துரை;- பெண்ணே, திருமாலிடமும், பிரமனிடமும், பிரமதேவரிடமும் இல்லாத பேரின்பத்தை நாம் அடையும்படியாக நம்மை குற்றம் நீக்கி ஆதரித்து நம் இல்லங்கள் தோறும் வந்து தம் பாதங்களேத் தரிசிக்க அருளிய சிவப்பிரானேப்பாடி நீராடுவோமாக.

அண்ணா மலையான் அடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகை வீறற்றாற்
கண்ணார் இரவி கதிர்வந்து கார்கரப்பத் [போற்
தண்ணார் ஒளிமழுங்கித் தாரகைகள் தாமகலப்
பெண்ணாகி ஆணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக்
கண்ணா ரமுதமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணே இப் பூம்புனல் பாய்ந் தாடேலோர்
[எம்பாவாய்
(18)

*கருத்துரை:- எம்பெருமானது பாதங்களில் வணங்கும் தேவர்களில் முடிமணியொளி குன்றினாற் போல கதிரவன் தோன்ற இருள் மறைய, உடுக்கள் ஒளி மறைய நின்ற பெருமானின் பாதங்களைப் பாடி நீராடுவோமாக.*

உங்கையிற் பிள்ளை யுனக்கே அடைக்கலமென்று
அங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்
எங்கள்பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க
எங்கை உனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன் றுங் காணற்க
இங்கிப்பரிசே எமக்கு எங்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயிறெமக்கேலோர்
[எம்பாவாய்.
(19)

*கருத்துரை :- பெருமானே, பயத்தால் ஒன்று கூறுவோம்! கேட்பீராக! — உன் பிள்ளை ''உனக்கே அடைக்கலம்!'' என்ற பழஞ்சொல்லைப் புதுப்பிக்கின்றோம். எம் தோள்கள் உன்னடியார்க்கே உரியன. எம் கைகள் உன்னடியார் திருப்பணியே செய்க. இரவும் பகலும் யாம் உன்னையன்றி ஒன்றும் காணுதொழிக. இந்தத் தன்மையை எமக்கருளினால் பெருமானே, கதிரவன் எங்கே உதித்தால் எமக்கென்ன ?*

போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்
போற்றி அருளுகநின் அந்தமாஞ் செந்தளிர்கள்
போற்றி யெல்லா வுயிர்க்குந் தோற்றமாம் [பொற்பாதம்
போற்றி யெல்லா வுயிர்க்கும் போகமாம் [பூங்கழல்கள்
போற்றி யெல்லாவுயிர்க்கும் ஈறும் இணையடிகள்
போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம்
போற்றியாம் உய்ய ஆட்கொண்டருளும் பொன் [மலர்கள்
போற்றியா மார்கழிநீ ராடேலோர் எம்பாவாய். (20)

கருத்துரை:- பெருமானே, காப்பாற்றுக. ஆதியாயும், அந்தமாயுமுள்ள பாதங்கள் காக்க, தோற்றம், காப்பு, அறிவு மூன்றுக்கும் காரணமான பாதங்கள் காக்க. மால் பிரமன் காணாத பாதங்கள் காக்க. நாங்கள் உய்ந்து பிழைக்க ஆட்கொண்டருளும் பாதங்கள் காக்க என்று நாம் நீராடி மார்கழி நீருக்கு வணங்குவோம்.

குறிப்பு:- வீதியில் சேர்ந்து செல்லும் பல பெண்கள் தம் தோழியரைத் துயிலெழுப்பி மார்கழி நீராட அழைத்துச் செல்லும் காட்சிகள் பல படியாகச் சித்தரித்துக்காட்டப்பெறுகின்றன. பாவை நோன்பு - மார்கழி நோன்பு-கார்த்தியாயனி விரதம் என்பதுமாம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்

அருளிச் செய்த

# திருப்பள்ளி எழுச்சி.



## திருப்பெருந்துறையில் அருளியது.

(திரோதான சுத்தி - மறைப்பு நீக்கம்.)

போற்றிஎன் வாழ்முத லாகிய பொருளே !
புலர்ந்தது; பூங்கழற் கிணைதுணை மலர்கொண்டு
ஏற்றிநின் றிருமுகத் தெமக்கருள் மலரும்
எழில்நகை கொண்டுநின் றிருவடி தொழுகோம்
சேற்றிதழ் கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
ஏற்றுயர் கொடியுடையாய் எனை யுடையாய் !
எம்பெருமான் ! பள்ளி எழுந்தருளாயே !

(1)

*பொழிப்புரை:-* தாமரை மலர்கின்ற வயல் சூழ்ந்த திருப்பெருந்துறைச் சிவபெருமானே! என் வாழ்முதலே! ரிஷபக் கொடியுடையாய் ! என்னையும் உடையவனே ! காப்பாற்றுவாயாக; பொழுது புலர்ந்தது; தங்கள் திருவடியில், அவ்வடிகளை ஒத்த பூக்களால் அர்ச்சனை செய்து, திருமுகத்தில் அரும்பும் புன்னகையைக் கண்டு மகிழ்ந்து, வணங்கி நிற்கிறோம் ஆதலால் துயிலுணர்ந்து பள்ளியினின்றும் எழுந்தருள்வீராக.

அருணன் இந்திரன்திசை அணுகினன் இருள்போய்
அகன்றது உதயம் நின்மலர்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழவெழ நயனக்
கடிமலர் மலரமற் றண்ணலங் கண்ணும்
திரள்நிரை யறுபதம் முரல்வன இவையோர்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
அருள்நிதி தரவரும் ஆனந்த மலையே
அலைகடலே பள்ளி எழுந்தருளாயே.

(2)

பொழிப்புரை:- திருப்பெருந்துறைச் சிவபெருமானே அருள் நிதியை (அருள்போல) பொழியும் ஆனந்த மலையே! அலைகடலே! அருணன் கீழ்திசைச்சேர்ந்தான்; இருள் நீங்கிற்று: உன் திருமுகத்தில் எழும் கருணையைப்போல், சூரியன் உதித்து எழுந்து மேலே செல்லச் செல்ல, உன் கண்ணை ஒத்த வண்டுக் கூட்டங்களும் சப்திக்கின்றன. இவற்றைக் கவனித்து பள்ளி எழுந்தருள்வீராக.

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுக ளியம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை யொளி யொளியுதயத்து
ஒருப்படுகின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழல் தாளிணை காட்டாய்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
யாவரும் அறிவரி யாயெமக் கெளியாய்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே!

(3

பொழிப்புரை:- யாவர்க்கும் அறிதற்கரியவனாய் எங்களுக்கு எளியனாகும் திருப்பெருந்துறைச் சிவபிரானே கோழி, குயில், நீர்ப்பறவைகள் இவையெல்லாம் கூவுகின்றன; சங்குகள் முழங்குகின்றன; நட்சத்திரங்கள் மறைகின்றன. சூரிய வெளிச்சம் தோன்றுகின்றது. எங்களுக்கு விருப்பத்துடன் உன் பாத தரிசனந் தரவேண்டி பள்ளி எழுந்தருள்வீராக.

இன்னிசை வீணையர் யாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகையர் அழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
என்னையும் ஆண்டுகொண் டின்னருள் புரியும்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே.

(4)

*பொழிப்புரை:- என்னையும் ஆட்கொண்டு அருள்புரியும் திருப்பெருந்துறைச் சிவபிரானே! உன் சந்நிதியில் ஒரு பக்கம் வீணையும் யாழும் இசைக்கிறார்கள். ஒரு பக்கம் வேதத்தையும், தோத்திரத்தையும் சொல்கிறார்கள், மற்றொரு பக்கம் கையில் தொடுத்த பூமாலையை வைத்துக் கொண்டு நிற்கிறார்கள், இன்னொரு பக்கம் தொழுபவரும் அழுபவரும் (பரவசத்தால்) உடல் நடுங்குபவருமாக பிறிதொரு பக்கம் தலைமேல் கைகூப்பியவருமாக நிறைந்துளர். இந்நிலையில் அடியேனை ஆட்கொண்டருள, பள்ளி எழுந்தருள்வீராக.*

பூதங்கள் தோன்றுநின் றாயெனின் அல்லாற்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுத லல்லால்
கேட்டறியோம் உனைக் கண்டறி வாரை
சீதங்கொள் வயல்திருப் பெருந்துறை மன்னா
சிந்தனைக்கும் அரியாய் எங்கள் முன்வந்து
ஏதங்கள் அறுத்தெம்மை யாண்டருள் புரியும்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே! (5)

*பொழிப்புரை:- குளிர்ச்சி பொருந்திய வயல் சூழ்ந்த திருப்பெருந்துறைக்கு அரசே! சிந்தனைக்கும் எட்டாதவனே உன்னை 'எல்லாப்பூதங்களிலும் இருக்கின்றாய்; உனக்குத்தோற்றமுமில்லை,அழிவுமில்லை' எனப்புலவர்கள் பாடி ஆடுவதல்லாமல், உன்னை நேரில் கண்டவர்களைக் கேட்டும் அறியோம். எங்களுக்குக் காட்சி தந்து, குற்றங்களை நீக்கி அருள்பவனே! பள்ளி எழுந்தருள்வீராக.*

பப்பற வீட்டிருந் துணரும்நின் அடியார்
பந்தனை வந்தறுத்தார் அவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின்றார் அணங்கின் மணவாளா !
செப்புறு கமலங்கள் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெருமானே
இப்பிறப் பறுத்தெமை யாண்டருள் புரியும்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே!

(6)

*பொழிப்புரை:- தாமரை மலர்கின்ற குளிர்ந்த வயல் சூழ்ந்த திருப்பெருந்துறைச் சிவபெருமானே! உமையாள் மணாளனே! துறவிற் சிறந்த நின்னடியார் தம் பாசவினையை அறுத்து, நாயகி பாவங்கொண்டு உன்னை வணங்குகிறார். எங்களுக்குப் பிறவித் துயர் நீக்கி அருள்புரியுமாறு பள்ளி எழுந்தருள்வீராக.*

அதுபழச் சுவையென அமுதென அறிதற்கு
அரிதென எளிதென அமரரும் அறியார்
இதுஅவன் திருவுரு இவனவன் எனவே
எங்களை ஆண்டுகொண் டிங்கெழுந் தருளும்
மதுவளர் பொழில்திரு உத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா
எதுவெமைப் பணிகொளும் ஆறது கேட்போம்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே!

(7)

*பொழிப்புரை :- தேன் சொரியும் சோலை சூழ்ந்த திருவுத்தரகோச மங்கைக்கும் திருப்பெருந்துறைக்குந் தலைவனே! நீ சுவையிற் பழமும் அமுதும் போல்வை, நீ தேவருக்கு அறிதற்கு அரியனாயும் அன்பர்க்கு எளியனாயும் இருக்கின்றாய், உன் உரு இன்னது, உன் தன்மை இன்னதுஎன்று நாங்கள் அறியும் வண்ணம் பள்ளி எழுந்தருள்வீராக.*

முந்திய முதனடு விறுதியு மானாய்
மூவரு மறிகிலர் யாவர்மற் றறிவார்
பந்தணை விரலியும் நீயும் நின்னடியார்
பழங்குடில் தொறும் எழுந்தருளிய பரனே !
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டி
திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி
அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆரமுதே பள்ளி எழுந்தருளாயே ! (8)

*பொழிப்புரை:- நிறைந்த அமுதம் போன்றவனே! உலகிற்கு முதலும், நடுவும், அந்தமும் ஆனவனே! உன் தன்மையைப் பிரம்மன், விஷ்ணு, ருத்ரன் மூவரும் அறியவில்லை. வேறு யார்தான் அறியக்கூடும்? பந்து பழகும் கையையுடைய தேவியும் நீயுமாக அடியார் குடிசைகளிலெல்லாம் எழுந்தருளுவீர்கள் இங்கு எனக்கு உன் தழல்போன்ற திருமேனியையும், திருப்பெருந்துறைக் கோயிலையும், அந்தணனாய் (குருமூர்த்தியாய்) தரும் கோலத்தையும் காட்டி ஆட்கொண்டாய்; மேலும் அருள்செய்ய பள்ளி எழுந்தருள்வீராக.*

விண்ணகத் தேவரும் நண்ணவு மாட்டா
விழுப்பொருளே உன தொழுப்படியோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே
வண்திருப் பெருந்துறை யாய்வழி யடியோம்
கண்ணகத் தேநின்று களிதரு தேனே
கடலமுதே கரும்பே விரும்படியார்
எண்ணகத் தாய் உலகுக்குயி ரானாய்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே ! (9)

*பொழிப்புரை:- விண்ணிற் றேவர்களும் அறியாச் சிறப்புடையாய்! இப்புவியில் வந்து தொண்டராகிய எங்களை வாழச்செய்கின்றாய்; எங்கள் கண்களிக்கக் காட்சி தந்து, தேனும் அமுதும் கரும்பும் போல இனிக்கின்றாய், எங்களுக்கு அருள்செய்ய பள்ளி எழுந்தருள்வீராக.*

புவனியிற் போய்ப் பிறவாமையில் நாள்நாம்
போக்குகின்றோம் அவமே இந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறைவாய் திருமாலாம்
அவன் விருப்பெய்தவும் மலரவன் ஆசைப்
படவும்நின் னலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்
ஆரமுதே பள்ளி யெழுந்தருளாயே !

(10)

பொழிப்புரை:- திருப்பெருந்துறையில் உறைபவனே! அமுதம் போன்றவனே! 'பூமியிற் பிறவாததனால் தங்கள் நாளை வீணாகிறது. இந்தப் பூலோகம் சிவபிரான் அருளால் மக்கள் உய்யுமிடம்' என்று நினைந்து திருமாலும் பிரமனும் இப் பூமியில் பிறக்க பெருவிருப்பங் கொண்டுளார். இந்நிலையில் எங்கட்கருள் செய்வதற்கென்றே உன் மலர்ந்த மெய்க்கருணையும் நீயும், இப்புவியிற் போந்தருள வல்லவனே! எழுந்தருள்வீராக.



